[19th August 1960

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்படி தாமதம் ஏற்படுவது பல காரணங்களால்—அதாவது தீ விபத்தினுடைய செய்தி கிடைப்பதற்கு தாமதமாகிறது, அதோடு அந்த இடங்களில் தண்ணீர் இறைப்பதற்கு வேண்டிய பிரஷர் கிடைப்பதில்லை—இப்படி பிராக்டிக்கலாக பல பிரதிகூலங்கள் இருக்கின்றன. கூடு மானவரை இதில் எதையெல்லாம் தீர்த்து வைக்க முடியுமோ அதையெல்லாம் தீர்த்து வைக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது.

*Preventive Detention Act*

* 281 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தடுப்புக் காவல் சட்டத்தை மேலும் நீடிக்க மாநில சர்க்காரின் ஆலோசனையை மத்திய சர்க்கார் கேட்டார்களா ?

(ஆ) அப்படியானால், மாநில சர்க்கார் என்ன யோசனை கூறியுள்ளனர் ?

(இ) இப்பொழுது இச்சட்டத்தின்கீழ் எத்தனை கைதிகள் நம் மாநிலத்தில் உள்ளனர் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The Government consider that it will not be in the public interest to divulge the suggestions made by this Government.

(*c*) No one, Sir.

SRI S. M. ANNAMALAI : ஸார், ஏற்கனவே இருந்து கொண்டிருக்கும் "க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட்"-ல் 151-வது செக்ஷன் இருக்கும் போது சர்க்காருக்கு இந்தச் சட்டம் தேவையா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் நேற்றுத்தான் இதைப்பற்றி சொன்னேன் என்று நினைக்கிறேன். இப்போது இருக்கின்ற "க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட்", 151-வது செக்ஷன் பிரகாரம் 15 நாட்களுக்குத்தான் ஒருவரைப் பிடித்து வைக்க முடியும். ஆகவே தான் இதற்கு மேலாக தனியாக ஒரு சட்டம் தேவையாக இருக்கிறது.

*Assignment of lands in a forest area*

* 282 *Q.*—SRI M. A. B. ARUMUGHASAMY : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா, ஆத்தூர் தொகுதியில் கன்னிவாடி ஜமீன் மலையடிவாரத்தில் காடுகள் வளர்ப்புக்கு லாயக்கில்லாத நிலங்களை ஏழைகளுக்கு ஜாரி செய்யக் கோரி 29–9–59, 28–12–59 தேதிகளில் கனம் ரெவின்யு அமைச்சர் அவர்களிடம் மகஜர் கொடுக்கப்பட்டதா ?

(ஆ) அப்படியானால், அதன்மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டது ?

19th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Yes, Sir.

(ஆ) The petitioner, who is the hon. Member himself, was informed that the question of the assignment of the lands in the forest area of Kannivadi estate would be taken up for consideration after the introduction of ryotwari settlement in the estates areas in the Madurai district.

SRI M. A. B. ARUMUGHASAMY : ஸார், செட்டில்மென்ட் முடியும் வரை, மேற்கண்ட நிலங்களில் விவசாயம் செய்து கொண்டிருப்பவர்களை, தொடர்ந்து விவசாயம் செய்து கொண்டிருப்பதற்கு சர்க்கார் அனுமதிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த செட்டில்மென்ட் நடந்து தீர்ந்தால் தான் இந்த நிலங்கள் எல்லாம் யார் யாருக்கு என்று தெரியும். ஒருக்கால் டாங்க் புறம்போக்குகளோ, அல்லது 'டாங்க் பெட்' களோ இருந்தால் அவைகளை எப்படி அனுமதிப் பது ? அவ்விதம் ஏதாவது இருந்தால் அவர்களை அப்புறப்படுத்த வேண்டியது அவசியமாகிறது.

SRI M. A. B. ARUMUGHASAMY : 'டாங்க் பெட்' களிலோ, அல்லது காட்டு இலாகாவுக்கு உபயோகமில்லாத நிலங்களிலோ விவசாயம் செய்து வருபவர்களுடைய நிலைமையைக் கருதி அவர்களை அந்த இடங்களிலே விவசாயம் செய்வதற்கு சர்க்கார் அனுமதிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த விஷயம் செட்டில்மென்ட் முடிந்த பின்னால் தான் தெரியும். சர்க்காருக்கு இடைஞ்சல் இல்லாத இடங்களாக இருந்தால் அதை ஜாரி செய்து கொடுப்பதற்கு நடவடிக்கை எடுக்கலாம்.

*Hospital at Gingee*

*283 Q.—SRI K. GOPALA KOUNDER : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செஞ்சியில் உள்ள ஆஸ்பத்திரியில் புதிதாகக் கட்டப் பட்ட emergency வார்டில் நோயாளிகள் படுக்க படுக்கை வசதி யில்லாமலிருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

(ஆ) ஏன் இதுவரையில் படுக்கைகள் சப்ளை செய்யப்பட வில்லை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) and (ஆ) The ward has been functioning with borrowed cots from 31st January 1960. Necessary arrangements have been made to purchase cots for the ward.

SRI K. GOPALA KOUNDER : ஸார், ஜில்லா சுகாதார அதிகாரி ஒன்றரை வருட காலமாக டென்டர் கோருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். நாளது வரையிலும் எந்த